மான்போலவே என்றும் ஒருநிலையாகப் பரமபதத்தில் வாழ்கிற அநந்தகருட விஷ்வக்ஸேநர் முதலியோர்; இவர்கள் முக்காலத்தும் நிரந்தரமான பகவதநுபவத்தை யுடையவர்கள். மநநசீலர் [அதாவது கடவுளை எப்பொழுதுந் தியானிப்பவர்] என்று பொருள்படுகிற 'முனிவர்' என்ற சொல், இங்கு முக்தர்களைக் குறித்தது; அவராவார் - இவ்வுலகங்களிற் கருமவசத்தராயிருந்து பின்பு கடவுளருளாற் பிறப்பையொழித்து முத்திபெற்றவர். இவ்விருதிறத்து அடியவருமே பரமபதத்திலுள்ளார்.

எம்பெருமானது ஐவகைநிலைகளுள், அர்ச்சை, வியூகம், விபவம் என்றவற்றை உட்கொண்டு 'இடபகிரிக்கும் பாற்கடற்கும் அயோத்திக்கும் துவராபதிக்கும் கிருபா'என்று விளித்தார். இவற்றில், அர்ச்சை - விக்கிரகரூபங்களில் ஆவிர்ப்பவித்தல்; அங்ஙனம் எழுந்தருளியிருக்குந் திவ்வியதேசங்கள் பலவற்றுள்ளும் இங்குத் தலைமைபற்றி, இடபகிரி எடுத்துக் கூறப்பட்டது. வ்யூஹமாவது-வாசுதேவ ஸங்கர்ஷண ப்ரத்யும்ந அநிருத்தர்களாகிய நான்கு ரூபத்துடன் திருப்பாற்கடலில் எழுந்தருளியிருக்கும் நிலை. விபவமாவது - மத்ஸ்யாவதாரம் முதலிய அவதாரங்கள்; அவை பலவற்றுள்ளும், தலைமைபற்றி, இராமகிருஷ்ணாவதாரங்கள் இங்குக் கூறப்பட்டன; "மாநீரயோத்தி வண்பூந்துவரை" என்றார் திருவரங்கத்தந்தாதியிலும். அயோத்தி - அயோத்யா என்ற வடசொல்லின் விகாரம்; அது, (பகைவராற்) போர்செய்து வெல்லமுடியாததென்று காரணப்பொருள்பெறும். துவராபதி - த்வாரவதீ என்ற வடசொல்லின் விகாரம். (௧00)

---

அலங்காரருக்குப் பரமச்சுவாமிக் கழகருக்குக்
கலங்காப்பெருநகரங்காட்டுவார்க்குக் கருத்தன்பினு
னலங்காதசொற்றொடையந்தாதியைப் பற்பநாபப்பட்டன்
விலங்காதகீர்த்திமணவாளதாசன் விளம்பினனே.

(இ - ள்.) அலங்காரருக்கு பரமச்சுவாமிக்கு அழகருக்கு - அலங்காரரென்றும் பரமஸ்வாமியென்றும் அழகரென்றும் திருநாமங்களை யுடையவரும், கலங்கா பெரு நகரம் காட்டுவோர்க்கு - அழிவில்லாத பெருமையுடைய ஸ்ரீவைகுண்ட நகரத்தை(த் தமது அடியவர்கட்கு வாழுமிடமாக)க் காண்பித்தருள்பவருமாகிய எம்பெருமான் விஷயமாக,—கருத்து அன்பினால் - மனத்திற்கொண்ட மெய்யன்பினால்,—நலங்காத சொல் தொடை அந்தாதியை - (காலபேதத்தால்) வாடுதலில்லாத சொன்மாலையாகிய இந்த அந்தாதிப்பிரபந்தத்தை, பற்பநாபப்பட்டன் விலங்காத கீர்த்தி மணவாளதாசன் - ஸ்ரீமந்நாராயணனது திருவவதாரமான பெரியபட்டரை (ஆசிரயித்து அவரைவிட்டு) நீங்காதிருத்தலாகிய புகழையுடைய அழகியமணவாளதாசன், விளம்பினன் - விண்ணப்பஞ்செய்தான்; (எ - று.)

பரமச்சுவாமியென்பது அழகர்க்கு ஒருதிருநாமமாதலை, "சேமியம்பரமசாமிவாழி," "பிரமர்போற்றிய பரமசாமி" என்ற அழகர்கலம்பகத்தாலும் அறிக. பரமஸ்வாமீ என்ற வடமொழிப்பெயர், சிறந்த தலைவனென்று பொ

ருள்பவும்: தலைவராவார்யாவர்க்கும் மேம்பட்ட தலைவனென்க. 'கலங்காப் பெருநகரங்காட்டுவோன்' என்ற தொடர், மூன்றாந்திருவந்தாதியில் வந்துள்ளது; ஒருகலக்கமுமில்லாதிருக்கிற பெரிய இராசதானியான பரமபதத்தை "வானவர் நாட்டையும் நீகண்டுகொள்ளென்று வீடுந்தரும் நின்றுநின்றே" என்றபடி அடியார்க்குத் தந்தருள்பவரென்க. கருத்தன்பினால் விளம்பினன் என இயையும். சொல்தொடை - சொற்கள்கொண்டு தொடுத்த பாமாலை. சிறிதுபொழுது கழிந்தவளவிலே வாடுமியல்பினதான பூமாலையினும் பாமாலைக்கு உள்ள சிறப்புத் தோன்ற, அதற்கு 'நலங்காத' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. மற்றும் இந்த அடைமொழியினால், இப்பிரபந்தம்,அழகருளால்,சொல்வழு பொருள்வழு இல்லாது "சொன்னோக்கும் பொருணோக்குந் தொடைநோக்கு நடைநோக்குந் துறையினோக்கோடு, எந்நோக்குங் காண இலக்கிய"மாய் அமைந்ததென்று கொண்டாடிக் கூறியதுமாம்.

பத்மநாபன் என்ற வடமொழி, பற்பநாபனெனச் சிதைந்தது; தாமரைமலரை நாபியிலுடையவ னென்பது, இதன் பொருள். இது, திருமாலின் திருநாமங்களில் ஒன்று. ஸ்ரீரங்கநாதனே திருவருளினால் கூரத்தாழ்வான் குமாரராய்த் திருவவதரித்தமைபற்றி, அப்புதல்வர்க்கு ஸ்ரீரங்கராஜபட்டரென்றும், திருவரங்கப்பெருமாள்பட்டரென்றும் திருநாமங்கள் வழங்கும்; அப்பெயரின் பரியாயநாமமாக 'பற்பநாபப்பட்டன்' என்றார். "நிழலின் நீங்கான்" என்றபடி ஆசாரியனைவிட்டுப்பிரியாது உடனிருந்து வழிபடுதல் சீடனுக்கு இன்றியமையாத தாதலால், அங்ஙனம் தாம் பட்டரை விட்டு நீங்காதவ ரென்பார், 'பற்பநாபப்பட்டன் விலங்காத கீர்த்தி மணவாள தாசன்' என்றார்: "ஆசார்யன்செய்த வுபகாரமானவது, தூய்தாக நெஞ்சு தன்னில் தோன்றுமேல் - தேசாந், தரத்தி லிருக்க மனந்தான் பொருந்த மாட்டாது, இருத்தலினி யேதறியோம் யாம்," "தன்னாரியனுக்குத் தானடிமை செய்வ தவன், இந்நாடுதன்னி லிருக்கும்நாள் - அந்நேர, றறிந்து மதிலாசையின்றி யாசாரியனைப், பிரிந்திருப்பாரார் மனமே பேசு" என்றார் பெரியாரும். பட்டர் - எம்பாருடைய சிஷ்யர்: பண்டிதர்க்கு வழங்குகின்ற பட்டரென்ற பெயர், இவர்க்குச் சிறப்பாக வழங்கும்; இவர், ஸ்ரீபாஷ்யகாரரால் நாமகரணஞ்செய்தருளப்பெற்றவர்.

இச்செய்யுள், நூலாசிரியர் தாமே தம்மைப் பிறன்போலும் பாயிரங் கூறியது. (பிரயோகவிவேகநூலார் 'இது, தன்னைப் பிறன்போலும் நாந்தி கூறுகின்றது,' 'வடநூலார் தாமே பதிகமும் உரையுஞ் செய்வார்', 'இனிச் சம்பந்தர் சடகோபர் முதலாயினாரும் திவாகரரும் பதினெண் கீழ்க்கணக்குச்செய்தாரும் முன்னாகப் பின்னாகப் பதிகங்கூறுவதுங் காண்க' என்றவை கருதத்தக்கன). இது, தற்சிறப்புப்பாயிர மெனப்படும்.

அழகரந்தாதி முற்றிற்று.



# அழகரந்தாதிச்

## செய்யுண்முதற்குறிப்பகராதி.


| செய்யுள். | பக்கம். | செய்யுள். | பக்கம். | செய்யுள். | பக்கம். |
|---|---|---|---|---|---|
| அங்கத்தமிழ் | ௫ | கோவலன் | ௪௨ | படராகுயால் | ௫௪ |
| அடைக்கலங் | ௧௨௬ | சரணியனுகத் | ௬௭ | பணிபதிவாட | ௧௨௪ |
| அண்ணலே | ௧௧௫ | சாற்றுக்கரும்பனை | ௩௨ | பார்தாமரை | ௫௦ |
| அரியவரங் | ௯௯ | சிந்திக்கலாங் | ௧௦௩ | பருப்பதங் | ௧௦௧ |
| அருடருமன் | ௪௮ | சீரிதாழ் | ௧௦௯ | பாதகரத்தனை | ௧௨௫ |
| அருளக்கொடி | ௧௨௨ | சூட்டோதிமஞ் | ௮௫ | பாவிக்கமல | ௮௩ |
| அல்லலங்காரை | ௧௨௭ | சேப்போதனஞ் | ௩௮ | பித்தரும்பாகின்ற | ௧௩ |
| அலங்காருக்கு | ௧௩௩ | செய்தவராக | ௨௨ | பிழைத்தலை | ௯௦ |
| அலங்காரன் | ௮௯ | செல்லுக்குவளை | ௮௪ | பின்னிறப்பும் | ௯௪ |
| அழக்கன்றிய | ௨௯ | சோராதகாத | ௨௮ | புரந்தர | ௧௩ |
| அளப்பதுமங்கை | ௯௮ | சோலையிலா | ௧௨௮ | புலமையிலே | ௧௧௯ |
| ஆதியாவிற் | ௫௭ | தஞ்சந்தன | ௫௩ | பேணிக்கவித்த | ௫௨ |
| ஆமவரைப் | ௯௧ | தனத்துக்கராவிய | ௪௬ | போதகத்தானும் | ௮௨ |
| இருக்கந்தர | ௩௯ | திங்களப்பாகின்ற | ௫௬ | போற்றியிராம | ௯௫ |
| உடலட்புயங்கத் | ௭௫ | திருகவிமங்கை | ௨ | மணவாளராவி | ௭௪ |
| உண்டிறக்கும் | ௧௦௮ | திருவிளையாடு | ௮௦ | மருந்துவந்தார் | ௩௫ |
| உய்வந்தொழும்பு | ௭௯ | துளவிலையார் | ௧௩௧ | மாணிக்கனகம் | ௧௧ |
| உயிர்க்கும்படிக்கு | ௧௨௩ | தெய்வம்பல | ௪௦ | மாதவரா | ௯௯ |
| உரைமாற்ற | ௯ | தோராயிரவு | ௫௧ | மாலைக்கரும்பு | ௧௨௯ |
| உலகுஇச்கும் | ௧௦௦ | தேவரையாதன் | ௬௩ | முத்தான்றே | ௫௦ |
| என்றுதாங் | ௪௧ | தேர்றுவித்தாற் | ௧௧௪ | முதுவிருந்தா | ௪௯ |
| எனக்காவி | ௭௧ | தோண்டுபடார் | ௭௮ | மெல்லியலைப் | ௯௩ |
| ஏத்துமின் | ௨௧ | தொலைந்தானை | ௧௧௧ | மொழித்தத்தை | ௧௨௦ |
| ஒருபாலமரார் | ௧௩௨ | நகரமுனுடும் | ௬௬ | மோதாகவந்தனை | ௯௨ |
| கண்டாகனன் | ௭௭ | நண்ணினனுக | ௪௩ | வாசம்பரந்த | ௮௯ |
| கவித்தானை | ௫௮ | நம்பிகின்றே | ௧௧௭ | வாழுரின்பங்கய | ௯௪ |
| கழலப்புகுந்த | ௪௪ | நன்னுதலைப் | ௧௧௦ | வானவதாரணி | ௯௦ |
| காதலைப்பத்தினி | ௪௭ | நாமங்களாவி | ௨௭ | வித்தகரும்பார்க் | ௧௮ |
| காப்பவனந்த | ௭௬ | நிலையாமை | ௨௫ | வினைக்குமருங் | ௨௩ |
| காமத்தனைப் | ௮௧ | நின்றபிராணன் | ௧௪ | வினையாட்டியேன் | ௭௦ |
| காலமலைக்கும் | ௧௨௧ | நினைப்பரியா | ௭௪ | வீழமாராமா | ௧௫ |
| கூடுமைக்குஞ் | ௧௫ | நீராழிவண்ண | ௭ | வெறுத்தவரை | ௩௯ |
| கொண்டமருந்து | ௧௦௫ | நெஞ்சமுருக்கு | ௨௬ | வைதாரையு | ௧௦௪ |
| கொண்டலையா | ௪௧ | நெஞ்சிலம்பாற்ற | ௧௩௨ | | |
| கொற்றவிராவண | ௧௧௭ | நேராயவேதனை | ௫௯ | | |


